ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

பரமகாருணிகரான

# பெரியவாச்சான்பிள்ளை

முதலான பூர்வாசார்யர்கள்

அருளிச்செய்த

## ரஹஸ்யங்கள்.

முதலாவது

# கலியனருள்பாடு.

ஸ்ரீமாந் - உ - வே

அரசாணிபாலை-கந்தாடை

கிருஷ்ணமாசார்யர்ஸ்வாமியால்

பரிசோதிக்கப்பட்டு,

செஞ்சி - இல்லீடு

அரங்கசாமிமுதலியார்

அண்ட் கம்பெனியாரால்

மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1889.

# விளம்பரம்.

---

இந்த க்ரந்தமும, மற்றும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய க்ரந்தங்களும் வேண்டுமவர்கள்;

திருவல்லிக்கேணி-பேயாழ்வார்ஸந்நிதிவீதி-௧0-வது கதவிலக்கமுள்ள மாளிகையில், (போஸ்ட் மாஸ்டர்ஜனரல்ஸ் ஆபீஸ்-க்ளார்க்) அரசாணிபாலை-கந்தாடை-கிருஷ்ணமாசாரியரிடத்திலும்;

திருவல்லிக்கேணி-வீரராகவமுதலிவீதி-52-வது கதவிலக்கமுள்ள மாளிகையில், (மக்டோவல் அண்ட் கம்பினி) செஞ்சி-இல்வீடு-அரங்கசாமிமுதலியாரிடத்திலும்;

சென்னையில்-சவரன்விற்கும் சராப்புக்கடைக்கு மேலண்டை செ-இ-அரங்கசாமிமுதலியார் அண்ட் கம்பினியாருடைய புஸ்தகஷாப்பிலும் வாங்கிக்கொள்ளலாம்.





ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த

# கலியனருள்பாடு.

ஸ்ரீய:பதியாய் அவாப்த ஸமஸ்தகாமனாய் ஸ்ரீ வைகுண்ட நிகேதனாய் ஸமஸ்தகல்யாணகுண பரிபூர்ணனாயிருக்கிற ஸர்வேஶ்வரன்; ஸகலாத்மாக்களோடு தனக்குண்டான ஸம்பந்தமொத்திருக்க, சிலர் தன்னை யநுபவித்து வாழ்ந்தும் சிலர் இழந்துகொண்டு அசித்கல்பராய்ப் போரவுங் கண்டு திருவுள்ளங்கலங்கி, "இவர்கள் நம்மைக்கிட்டி யநுபவிக்கும் விரகேதோ?" என்று பார்த்து, ஸமகாலீநர்க்கு ஆஶ்ரயணோபயோகியான விபவங்கள்போ லன்றிக்கே (பின்னானார்வணங்குஞ்சோதி) என்கிறபடியே எல்லாக்காலத்திலும் எல்லாத்தேசங்களிலும் எல்லார்க்கும் ஆஶ்ரயணம் ஸுலபமாம்படி பண்ணி, அர்ச்சாவதாரமாய் கோயில் முதலான திருப்பதிகள்தோறும் க்ருஹங்கள்தோறும் நித்யஸந்நிதிபண்ணி, ஆஶ்ரிதபராதீநனாயும், பராங்குஶ பட்டநாதாதி பக்தமுக்தராலும் அநேகாத்மாக்கள் உஜ்ஜீவிக்கும்படி ரக்ஷித்தருளாநிறகிற்காலத்திலே;

திருமங்கையாழ்வாரும்,(வென்றியேவேண்டி வீழ் பொருட்கிரங்கி வேற்கணார்கலவியேகருதி) என்று ஸர்வேஶ்வரன் விபூதியடைய இவர் தொடைக்கீழே கிடக்கிறதோ! என்று ஶங்கிக்கவேண்டும்படி அதிஶயிதாஹங்கார யுக்தராய், அதுக்கடியான தேஹாத்மாபிமாநத்தையுடையராய், ஆத்மவிஷயமாதல் ஈஶ்வரவிஷயமாதல் ஒரு ஜ்ஞாநம் பிறக்கைக்கு யோக்யதை யில்லாதபடி விஷயப்ரவணராயிருக்க; இவரை யிதினின்று மெடுக்க விரகுபார்த்து, இவருக்கு விஷயங்களிலுண்டான ரஸிகத்வமே பற்றாசாகத் தன்னழகையும், ஸர்வார்த்த ப்ரகாஶகமான திருமந்த்ரத்தையும், ஸௌஶீல்யாதி குணாதிக்யத்தையும், திருமந்த்ரார்த்தத்துக்கு எல்லைநிலமான திருப்பதிகளையும் காட்டிக்கொடுக்கக் கண்டவிவரும் ஹ்ருஷ்டராய், இவர் ( வாடினேன்வாடி ) என்று தொடங்கி உகந்தருளின நிலங்கள்தானே ஆஶ்ரயணீயமென்று நினைத்து, (ఆద్యం స్వయం వ్యక్త మిదం విమానం రఙ్గసంజ్ఞకమ్-ஆத்யம்ஸ்வயம்வ்யக்தமிதம்விமாநம் ரங்கஸம்ஜ்ஞிகம்) என்கிறபடியே-பகவதர்ச்சாவதார ஸ்த்தலங்களுக்கெல்லாம் ப்ரதாநமாய், (அற்றபத்தர்சுற்றிவாழுமந்தணீ ரரங்கம்) என்று சொல்லுகிறபடியே - பாகவதகோஷ்டிக்கெல்லாம் விரும்பிவர்த்திக்கும் ஸ்த்தலமான திருவரங்கந் திருப்பதியிலே நித்யவாஸஞ் செய்தருளிக்கொண்டு, நாள்தோறும், (கோலமாமணியாரமும் முத்துத் தாமமும் முடிவில்லதோரெழில்-நீலமேனிஐயோ!நிறைகொண்டதென்னெஞ்சினையே) என்கிறபடியே- பெரியபெருமாள் திவ்யமங்களவிக்ரஹத்திலே திருவுள்ளங் குடிபுகுந்து அத்தலைக்கு மங்களாஶாஸநபரராய், திருக்கோபுரம் திருமதிள் திருமண்டபங்கள் திருமடைப்பள்ளி முதலான கைங்கர்யங்களும் நடப்பித்துக்கொண்டு,

(இருந்தமிழ்நூற்புலவன்மங்கையாளன்)என்கிறபடியே-ஒருவராலும் களைகாணவொண்ணாதபடியிருக்கிற த்ரமிடமாஸ்த்ரத்தைக்களைகண்ட ஜ்ஞாநாதிக்யத்தையுடையராய், தமிழ்க்கவிகளுக் கெல்லாம் தலைவராய், நாலு கவிப்பெருமாள் என்று திருநாமம்பெற்று;

நம்மாழ்வார், பகவத்விஷய ப்ராவண்யாதிஶயத்தாலே யருளிச்செய்த ஸ்ரீஸூக்திகளான திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவாய்மொழி என்கிற நாலுப்ரபந்தங்களிலும் ஶப்தரஸம் அர்த்தரஸம் பாவரஸம்என்கிற ரஸவிஶேஷங்களை எப்போதும் அநுபவித்துக்கொண்டு,விஶேஷமாக ஆழ்வார் திருவாய்மொழியைத் தலைக்கட்டினவளவிலே * அந்தமில்பேரின்பம் பெற்றவராகையாலே, அத்தை மிகவும் உகப்புடனே நித்யமாக அநுஸந்தித்துக்கொண்டு போராநிற்கிற நல்லடிக்காலத்திலே ;

திருக்கார்த்திகை திவ்யமஹோத்ஸவத்திலே பெருமாளும நாய்ச்சிமார்களும் திருமஞ்சனங் கொண்டருளி * செங்கமலக் கழலிற்படியே நன்றாக வொப்பித்து நிற்க ; அபபோது ஆழ்வாரும் திருநெடுந்தாண்டகம் என்கிற ப்ரபந்தத்தையிட்டருளி, ப்ரதமம் பெரியபெருமாள் திருச்செவி சாற்றியருளும்படி தேவகானத்திலேயிட் டநுஸந்தித்து, திருவுள்ள முகக்கும்படி நன்றாகத் திருவாய்மொழி முகத்தாலு மேத்திநிற்க; பெரியபெருமாளும், ஆழ்வார் திறத்தில் திருவுள்ளங் குடிபுகுந்து, "ஆழ்வீர் ! நீர் இப்போதொருவார்த்தை சொல்லுவாரைப்போலே யிராநின்றீர், நாம் உமக்குச் செய்யவேண்டுவது உண்டாகில் சொல்லும்" என்ன; ஆழ்வாரும், "நித்ய ஸம்ஸாரியாய்ப்போந்த வடியேனை தேவரீர் இப

டி விஷயீகரித்தபின்பு ஒருகுறையுண்டோ? ஆகிலுமொ ருவிண்ணப்பமுண்டு" என்ன; பெருமாளும், "அத்தை ச்சொல்லும்" என்ன ; ஆழ்வாரும், "நாயன்தே ! நாய ன்தே! தேவரீர் லோகாநுக்ரஹார்த்தமாகச் செய்த ருளின அர்ச்சாவதாரஸ்த்தலங்களில் ப்ரதாநமான இந்த ஸ்த்தலத்திலே மார்கழிமாஸம் ஶுக்லபக்ஷத்தில் ஏகாத ஸியின்று அத்யயநோத்ஸவம் கொண்டருளும்போது ஶடகோபன் சொல்லான திருவாய்மொழியையும் வேத பாராயணத்தோடு கேட்டருளி, இதுக்கு வேதஸாம்ய மும் அநுக்ரஹித் தருளவேணும்" என்ன; பெரியபெ ருமாளும் திருவுள்ளமுகந்து, "அப்படியே வேதஸாம்ய மநுக்ரஹித்தோம், அத்யயநோத்ஸவத்திலே வேதபாரா யணத்தோடு திருவாய்மொழியையும் பாராயணம் பண் ணுங்கோள்" என்று அருளப்பாடு ப்ரஸாதித்தருளி; "கலியன் நம்மை தேவகாநத்திலே மிகவும் பாடுகையா லே அவர் மிடறு நொந்தது, ஆனபின்பு, நாமின்று தரி த்த ஶிஷ்டமான எண்ணெய்க்காப்பை அவர் திருமிடற் றிலே தடவுங்கோள்" என்று அருளப்பாடு ப்ரஸாதிக்க; பின்பு,பெருமாள்பரிகரமும் அவர் திருமிடற்றிலே எண் ணெய்க்காப்பைச் சாத்த; அவரும் க்ருதார்த்தராய் மட மேற வெழுந்தருளினபின்பு,திருநகரியிலும் ஆழ்வார் அ த்யயநோத்ஸவத்துக்குக் கோயிலேற எழுந்தருளும்படி க்குப் பெரியபெருமாள் திருமுகப்பட்டையமும் எழுதி ஸந்நிதிப்பேரையும் திருநகரிக்கு அனுப்பிவைக்க ; ஆழ் வாரும்,திருமுகப்பட்டையத்தை ஶிரஸாவஹித்து அத் யயநோத்ஸவத்துக்கு உதவும்படி கோயிலேறவெழுந்த ருளினபின்பு, திருமங்கைமன்னனும் ஆழ்வாரையெதிர் கொண்டு திருவடித்தொழுது, ஸந்நிதியிலே எழுந்தருள ப்பண்ணிக்கொண்டு போக; பெருமாளும் ஆழ்வாரைக்

குளிரக்கடாக்ஷித்தருளி, தம்திருவுள்ளத்தி லுகப்பாலே "நம்மாழ்வார்" என்று திருநாமஞ்சாற்றி, திருமாலைஸ்ரீசடகோபன் திருப்பரிவட்டம் முதலான வரிசைகளை ப்ரஸாதிக்க; திருமங்கைமன்னனும், மற்றைநாள் ஏகாதசி தொடங்கிப் பத்துநாளாக, ப்ராதஃகாலத்திலே வேதபாராயணமும், ராத்ரிகாலத்திலே திருவாய்மொழிஅநுஸந்தாநமுமாகக் காலவிபாகம்பண்ணி, வேதங்களை அநுஸந்தித்துச் சாற்றி, திருவாய்மொழி அநுஸந்தித்துச் சாற்றும்போது, ஆழ்வார் முன்பு திருவாய்மொழியைத் தலைக்கட்டினவளவிலே எம்பெருமான் திருவடிகளைச் சேர்ந்தபடியை அநுகரித்து, ஆழ்வாரைப் பெருமாள்திருவடிகளிலே சேரும்படி பண்ணுவித்து, ஆழ்வார் ப்ரதிஸம்வத்ஸரம் அத்யயநோத்ஸவத்துக்கு எழுந்தருளி திருவாய்மொழி அநுஸந்தாநம் நடக்கும்படி பண்ணுவித்து, திருமாலை ஸ்ரீசடகோபன் முதலான வரிசைகளெல்லாம் பெரியபெருமாள் ப்ரஸாதித்து அருளப்பாடும் ப்ரஸாதித்தருளும்படிபண்ணிக்கட்டளையு மிடுவிக்க; பின்பு, ஆழ்வாரும் க்ருதார்த்தராய், திருநகரியேறவெழுந்தருளி, ப்ரதிஸம்வத்ஸரம் கோயிலுக்கு எழுந்தருளி, அத்யயநோத்ஸவத்தைப் பரிபாலநம்பண்ணிக்கொண்டுவர ;

இப்படி சிலகாலம் சென்றபின்பு, கலிதோஷத்தாலே ஆழ்வார்கள் ஸ்ரீஸூக்திகளான திவ்ய ப்ரபந்தங்கள் லுப்தமாய், பஹுகாலம் அத்யயநாத்யாபநங்களின்றிக்கே, ஆழ்வாரும் அத்யய நோத்ஸவத்துக்குக் கோயிலேற வெழுந்தருளாமலிருக்க ; இப்படி சிலகாலம் சென்றவாறே, ஸ்ரீமந்நாதமுநிகள்; ஸ்ரீவேதவ்யாஸபகவான் லோகத்திலே (க) திரோஹிதங்க

(க) திரோஹிதங்களான-மறைந்துகிடந்த.

ளான வேதங்களை உத்தரித்தாப்போலே, ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களை உத்தரிப்பதாகத் திருவுள்ளமாய், திருநகரியேற வெழுந்தருளி, மதுரகவி ஸம்ப்ரதாயஸ்த்தரான ஸ்ரீபராங்குசநம்பி ஸந்நிதியிலே "கண்ணிநுண்சிறுத்தாம்பு" என்கிற ஆழ்வார்விஷயமான திவ்ய ப்ரபந்தத்தை லபித்து, பெரியபெருமாள் திருமங்கைமன்னனுக்காகத் திருவாய்மொழிக்குப் பண்ணின அநுக்ரஹாதிஶயத்தைக் கேட்டருளி மிகவும் திருவுள்ளமுகந்து, யோகதசையிலே ஆழ்வாரை ஸாக்ஷாத்கரித்து, தந்முகமாக, ஆழ்வார்கள் பதின்மரும் ஆண்டாளும் அருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களையும் லபித்து, க்ருதார்த்தராய், ஸ்வஶிஷ்ய ப்ரஶிஷ்ய முகத்தாலே அநேக ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அத்யயநாத்யாபநங்களைப் பண்ணிவைத்து, முன்புபோலே அத்யயநோத்ஸவத்திலே ஆழ்வார் கோயிலேறவெழுந்தருளும்படிக்கும் வேதபாராயணத்தோடுகூட திருவாய்மொழி அநுஸந்தாநம் நடக்கும்படி பண்ணி; பெரியபெருமாள் திருவாய்மொழிக்கு வேதஸாம்யத்தை அநுக்ரஹிக்கையாலே, வேதங்களுக்கு உபக்ரமோத்ஸர்ஜந காலநியமமுண்டானப்போலே, (த்ராவிடீம் ப்ரஹ்ம ஸம்ஹிதாம் த்ராமிடீம் ப்ரம்ஹஸம்ஹிதாம்) என்று ஓதப்பட்ட த்ராவிடவேதமான திருவாய்மொழிக்கும் திருக்கார்த்திகை திவ்யமஹோத்ஸவத்திலே உத்ஸர்ஜந காலமென்றும், மார்கழி மாஸத்தில் அத்யயநோத்ஸவத்திலே உபக்ரம காலமென்றும், த்ராவிட வேதமான திருவாய்மொழியைத் திருக்கார்த்திகை திவ்ய மஹோத்ஸவத்திலே உத்ஸர்ஜநம் பண்ணி, உபக்ரம காலமான அத்யயநோத்ஸவத்திலே பெரியபெருமாள் கேட்டருளுமளவும் ஸ்ரீவைஷ்ணவர்கள் * நெஞ்சினால் நினைந்து வாயினால் மொழியாமலிருக்

கும்படிக்கும், பெரியபெருமாள் ஆழ்வாருக்கு ப்ரதி வருஷம் திருமுகப்பட்டையம் ப்ரஸாதிக்கும்படிக்கும், அன்று திருக்கார்த்திகை திவ்ய மஹோத்ஸவத்திலே பெரியபெருமாள் தாம் சாத்திக்கொண்ட எண்ணெய்க் காப்புஶேஷத்தைத் திருமங்கைமன்னன் திருமிடற்றிலே சாத்துவித்து அவர் தம்மைப்பாடின இளைப்பெல்லாம் தீரும்படிபண்ணின கட்டளையை, ப்ரதிஸம்வத்ஸரம் திருக்கார்த்திகைதிவ்யமஹோத்ஸவத்திலே பெரியபெருமாள் சாத்திக்களைந்தஎண்ணெய்ஶேஷத்தை ஆழ்வார்களுக்கெல்லாம் தலைவரான நம்மாழ்வார் திருமிடற்றிலே சாத்தி, அந்தஶேஷத்தை ஸ்ரீ வைஷ்ணவர்கள் தங்கள் தங்கள் திருமிடற்றிலே சாத்தும்படிக்கும், ரிகாதிபேதத சதுர்விதமான வேதங்களுக்கு ஶிக்ஷாதிகளும் இதிஹாஸபுராணங்களும் அங்கோபாங்கங்களாயிருக்குமாப்போலே, ஆழ்வாரருளிச்செய்த நாலு ப்ரபந்தங்களும் நாலுவேதஸ்தாநேயாகவும், திருமங்கைமன்னன் அருளிச்செய்த ஆறு ப்ரபந்தங்களும் மற்றையாழ்வார்களும் ஆண்டாளும் அருளிச்செய்த ப்ரபந்தங்களும் அங்கோபாங்கங்களாகவும்; திருவாய்மொழிதானும் த்வயார்த்தவிவரணமென்றும்; திருப்பல்லாண்டுமுதல் பெரியாழ்வார்திருமொழி, திருப்பாவை, நாய்ச்சியார்திருமொழி, பெருமாள்திருமொழி, திருச்சந்தவிருத்தம், திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனாதிபிரான், ஆக இப்ப்ரபந்தங்கள் ப்ராயேண ப்ரணவார்த்த ப்ரகாஶகமாகையாலே முதலாயிரமென்றும்; கண்ணிநுண்சிறுத்தாம்பு, நமஶ்ஶப்தார்த்த விவரணமென்றும்; திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், முதலாழ்வாரருளிச்செய்த திருவந்தாதிமூன்றும், நான்முகன் திருவந்தாதி, திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிரு

வந்தாதி, திருவெழுகூற்றிருக்கை, சிறியதிருமடல், பெரியதிருமடல், மந்த்ரஶேஷவிவரணமென்றும்; இதில், திருவந்தாதிமூன்றுமுதலாக, பெரியதிருமடலீறாக, ஸப்தரஸ ப்ரதாநமாயிருக்கையாலே,இயல்பாஎன்றும், இப்படிஇருபத்து மூன்று ப்ரபந்தங்களும் திருமந்த்ரார்த்த விவரணமென்றும்; இப்ப்ரபந்தங்களிலே ஆழ்வார்களநுபவத்துக்கு விஷயமாய் எம்பெருமான் விரும்பி வர்த்திக்கிற ஸ்த்தலங்கள் பரமபதம்,திருப்பாற்கடல் தொடக்கமாக நூற்றெட்டென்றும்; திருவாய்மொழி யொழிந்த ப்ரபந்தங்கள், திருப்பல்லாண்டுமுதலாக திருநெடுந்தாண்டகமளவாக, அத்யயநோத்ஸவத்துக்குமுன்பு பத்து நாளாக பெரியபெருமாள் கேட்டருளும்படிக்கும்; திருவந்தாதிமுதலாக பெரியதிருமடலீறாக, அத்யயநோத்ஸவாநந்தரம் மற்றைநாள்கேட்டருளும்படிக்கும்; ஆழ்வார்கள் பதின்மர்,ஆண்டாள், ஸ்ரீமந் மதுரகவிகள் ஆக பன்னிரண்டு திருநாமங்களும் அருளிச்செய்த இருபத்துமூன்று ப்ரபந்தங்களில் பாட்டு நாலாயிரமென்றும்; ப்ராம்ஹணனுக்கு, வேதவேதாந்தங்கள் இதிஹாஸ புராணங்கள் அதிகரிக்கவேண்டுமாப்போலே, ப்ரபந்நரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு திவ்யப்ரபந்தங்கள் அதிகரிக்கவேணுமென்றும்; இதில், திருப்பாவை, திருப்பள்ளியெழுச்சி எம்பெருமானைத் திருப்பள்ளி யுணர்த்துவதாகையாலே ப்ராதঃகாலத்திலே நித்யம் அநுஸந்தேயமென்றும்; எப்போதும் ப்ரபந்தாநுஸந்தாநத்துக்கு முன்பு மங்களாஶாஸநபரமான திருப்பல்லாண்டு அநுஸந்தேயமென்றும்; திருவாய்மொழி அநுஸந்தாநத்துக்கு பூர்வோத்தரங்களிலே, ஆழ்வார் விஷயமான கண்ணிநுண்சிறுத்தாம்பு அநுஸந்தேய'மென்றும்; இப்படி ஸ்ரீவைஷ்ணவதர்ஶநத்திலே அநேக ஸ்ரீவைஷ்ணவ தர்மங்களை நியமித்த நியமநம்.

உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி,(க)பெரியமுதலியார்,பெரியநம்பி காலங்களிலும் செல்லாநிற்க; பின்பு, எம்பெருமானார் காலத்திலும் நடந்து செல்லாநிற்க; ஒருஅத்யயநோத்ஸவத்துக்குஆழ்வார் சில அநுபபத்திகளுண்டாகையாலே கோயிலேற வெழுந்தருளாமையாலே எம்பெருமானார்தாமே கோயிலிலே ஒரு நம்மாழ்வாரை திருப்ரதிஷ்ட்டைகொண்டருளப்பண்ணி அத்யயநோத்ஸவத்தை நடப்பித்து, திருமங்கைமன்னனொழிந்த மற்றையாழ்வார்களையும்திருப்ரதிஷ்ட்டைகொண்டருளப்பண்ணுவித்து, திவ்யதேசங்களிலும் ஆழ்வாரும் ஆண்டாளும் திருப்ரதிஷ்ட்டைகொண்டருளும்படிக்கும் நியமித்து, ஆழ்வார்கள்,(சென்று வணங்குமினோ சேணுயர்வேங்கடத்தை) (திருவேங்கடம் மொய்த்தசோலை மொய்பூந்தடம் தாழ்வரே) (எய்த்திளைப்பதன் முன்னமடைமினோ) என்றும்,(திருவேங்கடமாமலையொன்றுமே தொழ நம்வினையோயுமே) (திருவேங்கடம் நங்கட்குச் சமன்கொள் வீடுதரும் தடங்குன்றமே) என்றும், (வெற்பென்று வேங்கடம்பாடும்) என்றும், (தண்ணருவிவேங்கடம்) என்றும்,(வானோர்க்கும் மண்ணோர்க்கும் வெற்பு) என்றும், (வேங்கடமேவிண்ணோர்தொழுவதும்) (வேங்கடத்துச்சி) என்றும், இப்படி பலவிடங்களிலும், திருமலையாழ்வாரோடு அதில் நித்யவாஸம் பண்ணும் எம்பெருமானோடு ஒருவிஸேஷமின்றிக்கே தங்களுக்கு பரமப்ராப்யமென்று ப்ரதிபத்திபண்ணியும்,"ப்ராக்ருதஸரீரங்களோடு திருமலையை ஸ்பர்ஸியோம்" என்ற திருவுள்ளக்கருத்தையறிந்து திருமலையிலேஆழ்வார்களை திருப்ரதிஷ்ட்டைகொண் டருளப்பண்ணுவியாமல் திருமலையடிவாரத்திலேஅடிப்புளியாழ்வா

(க) பெரியமுதலியார்-ஸ்ரீமந்நாதமுனிகள்.

ரருகே திருமலையாழ்வாருக்கும் திருவேங்கடமுடையானுக்கும்மங்களாஶாஸநபரராய்திருமலையாழ்வாரோடு ஒருதிருமேனிகளாயெழுந்தருளியிருக்கும்படி நியமித்தும், அவர்களுக்கும் திருப்ரதிஷ்டை செய்தருளப்பண்ணுவித்தும், அவர்களுக்கு நித்யதிருவாராதநம்கொண்டருளும்படிக்கும், கோயில்போலே மற்றும் திருப்பதிகள் தோறும் அத்யயநோத்ஸவத்திலே திருவாய்மொழி முதலான திவ்யப்ரபந்தங்களெல்லாம் தத்தத்காலங்களிலே அநுஸந்திக்கும்படிக்கும், கோயில முதலான திருப்பதிகளிலேயும் நித்யம ஸாயங்காலத்திலே திருமாலைசாத்தியருளி திருவாலத்திகொண்டருளுகிறதுக்குஉசிதமான திருப்பல்லாண்டு பூச்சூடு காப்பிடு பெரியாழ்வார் தாம் பரமபக்தி தலையெடுத்தருளிச்செய்ததாய், உபக்ரமம் மங்களாஶாஸநப்ரபந்தஸமயாக* ...ன்னியோங்கு பத்துப்பாட்டும், திருப்பாணாழ்வார் பெரியபெருமாள் திவ்யமங்கள விக்ரஹ ஸௌந்தர்யத்திலே ஈடுபட்டு அநுஸந்தித்த அநந்தரத்திலே பேறுபெறுகையாலுண்டான ஏற்றமுடைய "அமலனாதிபிரான்" என்கிற ப்ரபந்தமும், (జ్ఞానీత్వాత్మైవ మే మతమ్- ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்) என்கிறபடியே எம்பெருமானுக்கு நற்சீவனாய் நமக்கெல்லாம் ப்ரதாநாசார்யரான நம்மாழ்வார் விஷயமான "கண்ணிநுண்சிறுத்தாம்பு" என்கிற ப்ரபந்தமும், அந்தந்த திருப்பதிகள்விஷயமான திருமொழிகளும், சாயங்காலத்திலே, நித்யம் அநுஸந்திக்கும்படிக்கும், திருப்பதிகள்தோறும் திருமுளைத்திருநாளிலே பெருமாள்திருவீதியிலே எழுந்தருளும்போது *செந்தமிழ்பாடுவாரானமுதலாழ்வார்கள்ஸ்ரீஸூக்தியான இயற்பாமுதலாக மூவாயிரமும, எம்பெருமான் ஸ்ரீபுஷ்பயாகம்கொள்ளும்போது வேதத்தோடேகூட திரு

வாய்மொழியும் அநுஸந்தேயமென்றும்; விஶ்வாமித்ரன் (కౌసల్యాసుప్రజారామ పూర్వాసన్ధ్యాప్రవర్తతే ఉత్తిష్ఠనరశార్దూల- கௌஸல்யா ஸுப்ரஜா ராம பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே- உத்திஷ்ட்ட நரஶார்த்தூல) என்று - சக்ரவர்த்தித் திருமகனை திருப்பள்ளியுணர்த்துகையைக் காண ஆசைப்பட்டு எழுப்பினபோலே, ஸ்ரீ தொண்டரடிப்பொடியாழ்வாரும், பெரியபெருமாள் திருப்பள்ளியுணர்ந்து தம்மைக் குளிரக்கடாக்ஷிக்க வேணுமென்று நினைத்து அவன் திருப்பள்ளியுணருகைக்கு அநுஸந்தித்த திருப்பள்ளியெழுச்சியையும், ஸ்ரீநந்தவ்ரஜத்தில் கோபிமார்களை ஸ்ரீக்ருஷ்ணனழகிலே துவக்குண்டு அத்தாலே அநந்யார்ஹைகளாய் மார்கழிநீராட என்கிற வ்யாஜத்தாலே முற்பாடரை யெழுப்பி எல்லாருங்கூட க்ருஷ்ணனை யெழுப்பி அவன்பக்கலிலே தங்களுடைய ஸமாவேஷத்தை அபேக்ஷித்துப் பெற்றபடியை அக்காலத்துக்குப் பிற்பாடையான ஆண்டாளநுகாரரூபத்தாலே அவர்களநுபவத்தை யருளிச்செய்ததான திருப்பாவையும், மார்கழிமாஸந்தோறும் கோயில்களிலும் க்ருஹங்களிலும் * சிற்றஞ்சிறுகாலத்திலே எம்பெருமான் திருப்பள்ளியுணரும்போது நித்யம் அநுஸந்திக்கும்படிக்கும்; பெரியபெருமாள் திருமங்கைமன்னனுக்காகத் திருவாய்மொழிக்குப் பண்ணின வேதவாநுஸந்தாநயாத்ரயன்றிக்கே ஆழ்வார்(க) பெரியமுதலியாருக்கு வேதாந்தார்த்தங்களோடு துல்யமாக ப்ரஸாதித்தருளின திருவாய்மொழி அர்த்தத்தை பெரியமுதலியார் ஸம்ப்ரதாயத்திலே கேட்டருளின அர்த்தத்தை க்ரந்தஸ்தமாக்கவேணுமென்று நியமித்தபடியே, திருக்குருகைப்பிரான்பிள்ளானும், ஸ்ரீவிஷ்ணுபுராண ஸங்க்யையாலே ஒரு வ்யாக்யானமிட்டருளி, திருமுன்பேவைத்து, எம்பெருமானாரும் அத்தைக்கடாக்ஷித்துத் திருவுள்ளமுகந்து "நம்முடையாரெல்லாரும் இத்தை ஸ்ரீபாஷ்யத்தோடேகூட அதிகரித்து (செந்தமிழும் வடகலையும் திகழ்ந்தநாவர்) என்கிறபடி

---

(க) பெரியமுதலியார் - ஸ்ரீமந்நாதமுனிகள்.

டீ-ஸம்ஸ்க்ருதத்ராவிட வேதாந்தத்வயத்தையும் ப்ர வசநமபண்ணிக்கொண்டுபோருங்கோள்" என்று, இப்ப டி அநேகம் ஸ்ரீவைஷ்ணவதர்மங்களை ஸகலதேசங்களி லும் ப்ரவர்த்தநம் செய்தருளியும, (వ్యాకుర్వతా తేనవిపశ్చి న్నోఘోర్వేదాన్తమవ్యాహతవాగ్విహారైః । రఙ్గేశకైఙ్కర్యధురన్ధరేణ యతీశ్వరేణోక్షిత మఙ్గుళీభిః-வ்யாகுர்வதாதேந விபஶ்சிதோ ...கா வேதாந்தமவ்யாஹதவாக்விஹாரைঃ- ரங்கேஶகை ங்கர்ய துரந்தரேண யதீஶ்வரேணோக்ஷிதமப்ததஷஷ்டிঃ) என்றும் (రామానుజస్య స్తుతశైర్యతీనాంపీఠైశ్చతుస్సప్తతిభిస్సమే తైః । ఏకాన్తిభిర్ద్వాదశభిస్సహస్రైః శ్రీరఙ్గ ఆస్తే యతిసార్వభౌమః, ராமாநுஜஸ்ஸப்தஶதைர்யதீநாம் பீடைஶ்சதுஸ்ஸப்த திபிஸ்ஸமேதைঃ- ஏகாந்திபிர்த்வாதஶபிஸ்ஸஹஸ்ரைঃ ஸ்ரீரங்க ஆஸ்தே யதிஸார்வபௌமঃ) என்றும் சொ ல்லுகிறபடியே - திருவரங்கப் பெருநகரிலே அநேகம் முதலிகளோடேகூட வேதாந்தார்த்தங்களெல்லாம் ப்ர காஶிக்கும்படிவ்யாக்யாநமசெய்தருளிக்கொண்டு, பெரி யபெருமாள் திருச்செலவமும் நித்யாபிவ்ருத்தமாமபடி மங்களாஶாஸநம செய்தருளி, வாழ்ந்துகொண்டிருக்க,

பின்பு எம்பெருமானார் அவதாரஸமாப்த்யநந்தரம பெருமானுக்கும் ஸ்ரீரங்கநாயகியாருக்கும் வரகுமாரரா ன ஸ்ரீபராசரபடடரும, எலலாரகும ஆசாரயகுமார ரான திருக்குருகைபபிரான்பிள்ளான், அருளாளப்பெ ருமா ளெமபெருமானார், எம்பார், கந்தாடையாணடான், முதலானார்கள், (రామానుజార్యప్రతిమానిభావ్యమఙ్గంరహస్యం ప్రమదప్రతేశ్చ।సంప్రాప్య తేనైవగురూకృతాంస్తాన్ భజేచతుస్సప్తతి పీఠసంస్థాన్, ராமாநுஜார்ய ப்ரதிமௌளிபாஷ்யமாத தமாஹஸ்யம்ப்ரமிடப்ருதேஶ்ச-ஸம்ப்ராப்யதே நைவ குரு க்ருதாம்தாந் பஜேசதுஸ்ஸப்ததி பீடஸம்ஸ்தாந்) என்கிறபடியே- எமபெருமானார் திருவடிகளில் ஸம்பந் தமாகிற ராஜகுல மாஹாத்ம்யமுடையராய், அவர் ஸந் நிதியிலேயே உபயவேதாந்தார்த்தங்களையும் லபித்து, ஆசார்யபத நிர்வாஹகராயிருந்துகொண்டு, கோயிலி

லேஎம்பெருமானாரை நித்யஸேவார்த்தமாகவும் "ஸ்ரீமந் நாராயணனே பரதத்த்வம்" என்னும் அர்த்தத்தை ஸ்ரீ பாஷ்யமுகேந ப்ரவசநம் பண்ணிக்கொண்டுவரும் காலமெல்லாம் லீலாவிபூதியிலே எழுந்தருளியிருக்கிறார் என்கைக்காகவும, எம்பெருமானார் அர்ச்சாரூபேண எழுந்தருளுமபடிக்கும பெரியபெருமாள் நியமநமுண்டான படியாலும், அர்ச்சாரூபேண திருப்ரதிஷ்டைகொண்டருளப்பண்ணியும், மற்றும் திருப்பதிகள்தோறும் எமபெருமானாரை திருப்ரதிஷ்டைகொண்டருளப்பண்ணுவிக்கும், (అర్వాఞ్చో యత్పదసరసిజద్వన్ద్వ మాశ్రిత్యపూర్వేమూర్ధ్నా యస్యాన్వయముపగతా దేశికాముక్తిమాపుః, அர்வாஞ்சோயத பதஸரஸிஜத்வந்த்வ மாஶ்ரித்யபூர்வே மூர்த்நாயஸ்யாந்வயமுபகதா தேஸிகாமுக்தி மாப்தா:) என்கிறபடியே - தமமுடைய திருவடிகளில் ஸம்பந்த ஸமபந்த முடையவர்களுக்கெல்லாம தாம உத்தாரகராயும், தமக்கு முன்புள்ள முதலிகளுக்கு பவிஷ்யதாசார்யாவதாரம் என்னுமபடி உத்தாரகராயும், (విష్ణోశ్శేషీతదీయశ్శుభగుణనిలయో విగ్రహశ్శ్రీశఠారిః శ్రీమాన్ రామానుజార్యః పదకమలయుగం భాతి రమ్యంతదీయమ్। యస్మిన్ రామానుజార్యే గురురితిచపదంభాతినాన్య త్రతస్మాత్ శిష్టం శ్రీమద్గురూణాంకులమిదమఖిలంతస్యనాథస్యశేషమ్, விஷ்ணுஶ்ஶேஷீ ததீயஶ் ஶுபகுணநிலயோ விக்ரஹஶ் ஸ்ரீஶடாரி: ஸ்ரீமாந்ராமாநுஜார்ய:பதகமலயுகம்பாதிரம்யம் ததீயம்-யஸ்மிந்ராமாநுஜார்யே குருரிதிசபதம்பாதி நாந்யத்ர தஸ்மாத் சிஷ்டம் ஸ்ரீமத்குரூணாம் குலமிதமகிலம தஸ்யநாதஸ்ய ஶேஷம) என்கிறபடியே-பகவதவதாரத்துக்கு ப்ரதிநிதியான ஆசார்யாவதாரமாய், இப்படி ஸகலஜந ஜீவாதுவான எம்பெருமானார் விஷயமான நூற்றந்தாதியை, பெரியமுதலியார் கண்ணிநுண்சிறுத்தாம்பை அருளிச்செயலநடுவே சேர்த்தாப்போலே, திவ்ய ப்ரபந்தங்களோடு ஒருகோவையாய்ச் சேர்த்து, அத்யயநோத்ஸவாநந்தரத்திலே இயற்பா அநுஸந்தாநாநந்தரத்தில் அநுஸந்திக்கும்படிக்கும்; திருவாய்மொழி அநுஸந்தாநாநந்தரம கண்ணிநுண்சிறுத்தாம்பு

அநுஸந்தேயமானாப்போலே, ததநந்தரம் இத்வைய அநுஸந்திக்கும்படிக்கும்; ப்ராம்ஹணனுக்கு நித்ய காயத்ரீஜபம் கர்த்தவ்யமானாப்போலே, ப்ரபந்நனுக் இதுவும் நித்யாநுஸந்தேயமென்றும்; (பேறொன்றுமறில்லை நின்சரணன்றி, அப்பேறளித்தற்-காறொன்றுமில்லை மற்றச்சரணன்றி) என்றும் - எம்பெருமானார் திருவடிகளை ப்ராப்யப்ராபகமென்றும் தாங்கள் அத்யவஸித்து, தங்களைப்பற்றினார்க்கு உபதேசித்தும்; இப்ப சரமார்த்தவிஶேஷங்களெல்லாவற்றையும்வெளியிட்டு கொண்டு (படித்வாபாஷ்யம் தத்ப்ரவசநயஶக்தௌஶரிபோ: கௌஶ்ருத்தாதத்வம் மதுரிபுநிவாஸஸ்த்தலே - வஸித்வாரங்காதௌததிபஹரேர்ச்சநவிதௌ ஶுசிம்த்ரவ்யாணாம் ‡ க்ரஹநமயஶுத்தேநமநஸா வயஸ்ய ஸ்ரீஶாங்க்ரி ப்ரபதநபரஸ்யோக்திரநிஶம் ப்ரபந்நாநாம் ஶௌரே: பதகமலஸேவாபரிசய:-க்ருஷிம் க்ருத்வாதஸ்மிந் யதுகிரிதடே நித்யவஸதிம் ஷடர்த்தா ஸ்ரீகாந்த ப்ரபதநவிஶௌஸாதகதமா:, இதிபரோக்தோஷ்வேகம் ருசிவிஷயமாலம்ப்யபகவத் பராம்காலக்ஷேபம் குருதபவதாநந்யஶரணா:-ஸ்வஹஸ்தேஷம்ப்ரீத்யா குருசரணபக்த்யாசபவதாம் ஶரீராந்தே ஸ்ரீமாந் ப்ரதிஶதபரம் தாமஸஸுகம், இதிஸ்ரீமாந்ராமாநுஜமுநிரா ‡ விநதாந்த்ருத்யவிநதாந்பணீந்த்ராம்ஶோயோகீசரமஸமயேப்ராஹதயயா) என்று அருளிச்செய்தபடியே இதரமதநிரஸந பூர்வகமாக உபயவேதாந்தங்களையும் வ்யாக்யாநஞ்செய்தருளிக்கொண்டு, ஆழ்வார்கள் ஸ்ரீஸூக்திகளான திவ்ய ப்ரபந்தங்களையும ப்ரவசநம் பண்ணிக்கொண்டு, தத்ததிகாராநுகுணமாக ஹிதோபதேசம் செய்தருளிக்கொண்டு, எம்பெருமானார் தர்ஶநத்தை வர்த்திப்பித்துக்கொண்டு வந்தார்கள்என்று ஜீயரருளிச்செய்யக் கேட்டிருக்கையாயிருக்கும் என்றுபிள்ளையருளிச்செய்வார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

‡ இங்கு விட்டுப்போன க்ரந்தத்தை கோசாந்தரங்களிற் காண்க.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

பரமகாருணிகரான

# பெரியவாச்சான்பிள்ளை

முதலான பூர்வாசார்யர்கள்

அருளிச்செய்த

# ரஹஸ்யங்கள்.

இரண்டாவது.

க. வார்த்தாமாலை.

உ. பட்டர் நஞ்சியருக்கருளிச்
செய்த பத்தார்த்தம்.

ந. திருக்குருகைரத்நம்.

ஸ்ரீமாந் - உ - வே

அரசாணிபாலை-கந்தாடை

கிருஷ்ணமாசார்யர்ஸ்வாமியால்

பரிசோதிக்கப்பட்டு,

செஞ்சி - இல்லிடு

அரங்கசாமிமுதலியார்

அண்ட் கம்பெனியாரால்

மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1890.

# விளம்பரம்.

இந்த க்ரந்தமும், மற்றும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய க்ரந்தங்களும் வேண்டுமவர்கள்;

(க) திருவல்லிக்கேணி-பேயாழ்வார்ஸந்நிதிவீதி-க0-வது கதவிலக்கமுள்ள மாளிகையில், (போஸ்ட் மாஸ்டர்ஜனரல்ஸ் ஆபீஸ்-க்ளார்க்) அரசாணிபாலை-கந்தாடை-கிருஷ்ணமாசாரியரிடத்திலும்;

(உ) திருவல்லிக்கேணி-வீரராகவமுதலிவீதி-52-வது கதவிலக்கமுள்ள மாளிகையில், (மக்டோவல் அண்ட் கம்பினி) செஞ்சி-இல்வீடு-அரங்கசாமிமுதலியாரிடத்திலும்;

(ஙு) சென்னையில்-சவரன்விற்கும் சராப்புக்கடைக்கு மேலண்டை செ-இ-அரங்கசாமிமுதலியார் அண்ட் கம்பினியாருடைய புஸ்தகஷாப்பிலும் வாங்கிக்கொள்ளலாம்.





ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# வார்த்தாமாலை.

க. மத்ஸ்யத்தினுடைய ஆகாரமெல்லாம் ஜலமயமாயிருக்குமாப்போலே, ஸ்ரீமானுடைய வடிவந்தனையும் ஸ்ரீமயமாயிருக்கும் என்று (க) பெரியமுதலியார் அருளிச்செய்வர்.

உ. ஸம்ஸாரவிஷ தஷ்டனுக்கு ரஸாயநஸேவை போலே என்று மணக்கால்நம்பி அருளிச்செய்வா.

ந. அந்தனுக்கு மஹாநிதிபோலே என்று ஆளவந்தார் அருளிச்செய்யும்படி.

ச. (உ) த்ருஷார்த்தனுக்கு அம்ருதபாநம்போலே என்று திருமாலையாண்டான் அருளிச்செய்வர்.

ரு. ஸ்தநந்தயப்ரஜைக்கு ஸ்தந்யம்போலே என்று திருக்கோட்டியூர்நம்பி அருளிச்செய்வர்.

சா. பதிவ்ரதைக்கு மங்கள ஸூத்ரம்போலே என்று பெரியநம்பி அருளிச்செய்வர்.

எ. ராஜகுலத்துக்கு முடியும் மாலையும்போலே ப்ரபந்நகுலத்துக்கு த்வயோச்சாரணம் என்று ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்வர்.

அ. குருபரம்பரையை யொழிந்த த்வயமும் ஸாதநாந்தரத்தோடொக்கும் என்று முதலியாண்டான் அருளிச்செய்வர்.

---

(க) பெரியமுதலியார் - ஸ்ரீமந்நாதமுனிகள்.

(உ) த்ருஷார்த்தன் - தாகத்தினால் ஏங்கினவன்.

௯. எலுமிச்சம்பழம் கொடுத்து ராஜ்யம் பெறுவாரைப்போலே என்று திருக்குருகைப்பிரான்பிள்ளான் பணிப்பர்.

௧௦. பிறவிமிடியன்கையிலே சிந்தாமணி புகுந்தாப்போலே என்று பிள்ளையுறங்காவில்லிதாஸர் அருளிச்செய்வர்.

௧௧. ராஜகுமாரனுக்கு கர்ப்பூர நிகரம்போலே, பரபந்நனுக்கு ப்ரபத்தியைவிடில் நாக்துவராளும் என்று நம்பிள்ளை அருளிச்செய்வர்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

வார்த்தாமாலை - ஸம்பூர்ணம்.

---

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

## பட்டர் நஞ்சீயருக்கருளிச்செய்த

# பத்தார்த்தம்.

---

சரக்கேற்றின மரக்கலத்துக்குக் கேடு, காற்றாலேயாதல்,மஹாமத்ஸ்யங்களுடைய(க) புச்சவிக்ஷேபத்தாலேயாதல்,ஸமுத்ரஸ்த பர்வத ஶிகரத்திலேதட்டியாதல்,பெருங்கடல்பாய்ந்துப்ரதீகாரமில்லாத அழிவுவருமாப்போலே; எம்பெருமான் திருவடிகளில் பண்ணிவைத்த ப்ராப்திக்கும், பகவத் பாகவத விஷயங்களிலே அறிந்தும் அறியாமலும் பண்ணின அபசாரங்களாலே சில அந்தராயங்கள் நாஶபர்யந்தமாக வந்து ஸம்பவிக்கும்: தத் பயஸம்பாவநாநிவ்ருத்யர்த்தமாகவே இப்பத்துவார்த்தையையும் கேட்டு புத்திபண்ணி நிர்ப்பரனாய், மார்பிலே கையைவைத் துறங்குவது. அவை யெவையென்னில்;—

க. ஆசார்யன் திருவுள்ளத்தாலே அநவரதம் நினைக்கும்படி ஶரீரார்த்த ப்ராணங்களை அழியமாறியாகிலும் ஒரு கைங்கர்யம் உறுதியாகச்செய்வது;

---

(க) புச்சவிக்ஷேபம் - வாலை அசைத்தல்.

௨. பகவத் விஷயத்திலும், எல்லாரும் கொண்டாடும்படியாகவும், திருவுள்ளத்துக்குப் பாங்காகவும், தன் நெஞ்சுஉணரவும், ஒரு ஸ்ரீகார்யம் செய்வது;

௩. பாகவத விஷயத்திலும், அப்படியே பல ஸ்ரீ வைஷ்ணவர்கள் கோஷ்டியிலும், "இன்னான் கல்யாணன், பாகவதவிஷயத்தில் செய்து போரும்படியே அழகிது!" என்று கொண்டாடும்படி போரவும்;

௪. அந்யதேவதோபாஸநாதிகளை ஆசரியாதொழியவும்; அந்யதேவதோபாஸகரோடு ஸஹகமந ஸஹவாஸ ஸஹாவஸ்தாந ஸம்பாஷணாதிகளை வருந்தியும் ஒழியவும்;

௫. வறு நாற்றத்தை யாசைப்பட்டு பெருச்சாளி இடரிலே யகப்பட்டு அநர்த்தப்படுமாப்போலே, அர்த்த ஸம்பந்தாதி நிமித்தமான போஜநாதிகளாலே ஜ்ஞாந ஹாநிபிறந்து,ஸ்ரீவைஷ்ணவகோஷ்ட்டியிலும்பஹிஷ்க்ருதனாய்விடும்; ஶிரச்சேதாபிஷேகபர்யந்தமான மஹாபத் ஸம்பத்துக்கள் ஸம்பாவிதமானாலும், ஜ்ஞாநதர்ம ப்ரச்யுதி பிறவாதபடி த்ருடாத்யவஸாய காஷ்டாகதனாயிருக்கவும்; இதுக்கு த்ருஷ்டாந்தபூதரிறே-பெரியநம்பியும், கூரத்தாழ்வானும்;

௬. ஸாமாந்யஶாஸ்த்ரத்தில் கண்வையாதே விஶேஷ ஶாஸ்த்ரத்திலே அநவரத த்ருஷ்டியாய் அநுஷ்டானத்திலும் அப்படியே ஒருங்கப்பிடித்துப்போரவும்; ஆதிபரதனும் திருக்கண்ணமங்கையாண்டானுமிறேயிதுக்கு உபமாநபூதர்;

௭. நமக்கெட்டாத நிலமன்றேவென்னில்:—ஏறுவான சாரங் குதிரை இன்னெஞ்சற் கெல்லாமரிதிறே. அத்யவஸாய மப்யஸிக்க வருமையில்லை. ஒருத்தி அப்யாஸத்தாலே ஆனையை யெடுத்துக் காட்டினாள் என்று பழஞ்சொல் இல்லையோ ?.

௮. கோயில் திருமலை பெருமாள்கோயில் தொடக்கமான ப்ரஸித்த க்ஷேத்ரங்களிலே நித்யவாஸம் பண்ணுதல், அங்கே நித்யவாஸம்பண்ணும் அபியுக்தரான

ஸ்ரீவைஷ்ணவர்கள் பலகாலும் நினைக்கும்படி ஆபிமுக்யம்பண்ணுதல், அர்த்தோபகாராதிகளாலே அநுவர்த்தித்துக்கொண்டு போரவும் ;

கூ. புத்ர க்ஷேத்ர களத்ரார்த்த மித்ர தேஹாதிகளில் அதி ப்ரவ்ருத்திபண்ணாதே, ஆசார்யன் ஆத்மஹிதம்பண்ணினதுக்கு ஒரு வாசிதெரிய அவற்றோடு ஒட்டற்று வர்த்திக்கவும்;

க௦. ஸர்வவித பந்துவான எம்பெருமானை நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்கவேண்டுமே என்று அபேக்ஷித்துப் போரவும்.

**இப் பத்து அர்த்தமும், ப்ரபத்திஸ்தாநம்.**

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

பட்டர் நஞ்சீயருக்கருளிச்செய்த

பத்தார்த்தம் - ஸம்பூர்ணம்.

---

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# திருக்குருகைரத்நம்.

---

திருநாமதாரி முத்ராதாரி மந்த்ரஸம்பந்தி என்கிறவன், ப்ரக்ருதிருசியொழிய ஸ்வரூபருசி அறியான் ; ஆகையால், ரூபநாமங்களால் போராது; ஸச்சிஷ்ய ஸதாசார்ய ஸம்பந்தமும், ஜீவாத்மா பரமாத்மா ஸம்பந்தமும், திருமந்த்ரத்தாலே, தன்னை உள்ளபடி உணரவேணும்; சரமஶ்லோகத்தாலே, எம்பெருமான்றனே உபாயம் என்று தெளியவேணும்; த்வயத்தாலே, உபாயோபேயாந்தர நிவ்ருத்தியான த்வயாநுஸந்தாந பரனாய், நிர்ப்பரனாய், நிர்விகாரனாய், ஸ்ரீமந்நாராயணன் திருவடிகளிலே பண்ணும் நித்யகைங்கர்யமறியவேணும்;

நித்யகைங்கர்யமறியும்போது, ததீயகைங்கர்யமறியவே ணும்; இப்படியன்றிக்கே ஶாஸ்த்ரத்தாலே பாவிக்கில் "நானறிகிறேன்" என்கிறவன் அறியான்; அவனோட்டை ஸஹவாஸம், அந்யஶேஷத்வம்; ஸ்வரூபவானாய் புருஷகாரபூதனான ஆசார்யனறிகையிலே தத்வத்ரயஶிக்ஷையும் ரஹஸ்யத்ரய ஶிக்ஷையும் உடையனாகில், அவனோட்டை ஸஹவாஸம் ஸ்வரூபோஜ்ஜீவநம்; இப்படியன்றிக்கே, உபாயாந்தரராகிலன்றோ கூழாளாகிறது? "தானும் பிறரும் தனக்குத்தஞ்சமன்று" என்றிருக்கும் ஆகிஞ்சந்ய மன்றோ? (நாடுநகரமும் நன்கறிய நமோநாராயணாய) என்கிறபடியே * அநந்தாவை வேதத்துக்கு அதிகாரியாய், தேஹமிட்டவழக்கன்றிக்கே, தேஹிகளிட்ட வழக்கன்றிக்கே, தேஹாநுபந்திகளான பதார்த்தங்களிட்ட வழக்கன்றிக்கே, ஸ்வரூபமிட்டவழக்கானபோதன்றோ? தான் அவன்றிருவுள்ளமறிந்தஶ்ரீவைஷ்ணவனாவது. தேஹமிட்டவழக்கன்றிக்கே, பூர்வவத் பூர்வதசை பரித்யாஜ்யம்; உத்தரதசை ஆத்மஸாக்ஷாத்கார ஜ்ஞாநமுடையனாய், ஆசார்யாநுபவ ஸாக்ஷாத்கார ஜ்ஞாநமுடையனாய், *பிடித்தார் பிடித்தாரைப்பற்றித் திருவடிகளிலேயணணும் அநவரத நித்ய கல்யாண போக ஸர்வகந்தஸ் ஸர்வரஸஸ் ஸதா பஶ்யந்தி பண்ணுகையன்றோ ஸ்வரூபலாபம்?. இப்படி ஜ்ஞாநமும் விரக்தியும் ஶாந்தியுமுடையனாயிருக்கு மொரு ப்ரபந்ந னபிமாநத்திலே யொதுங்கி வர்த்தித்தல், தன்னாசார்ய னபிமாநத்திலே யொதுங்கி வர்த்தித்தல், அப்போதன்றோ தன் ஸ்வரூபத்துக்கு அநுரூபமான வ்ருத்தியும் ஸ்வயம்பாகமும திருமண் தீர்த்தப்ரஸாதமு முடையனாய் வாழும்நாளாகிறது! அப்போதன்றோ (శరీరమర్థం ప్రాణంచ సద్గురుభ్యో నివేదయేత్ - ஶரீரமர்த்தம் ப்ராணஞ்ச ஸத்குருப்யோ

கிவேதயேத்) என்கிற ப்ரமாணம்! அதறிகையன்றே உஜ்ஜீவநம்? இது தர்மநார்த்தம் உட்பட்ட மிகை. இது ஸ்வரூபஶோதனை; அதிகாரிக்கு அறியவேண்டுவது. அவ்வதிகாரி தீர்த்தப்ரஸாத முடையனாகையாலே பரிஜ்ஞாநம் எல்லா மவனுக்கே வந்தது. ஸ்வைகுந்தமாவது இவன் கையதாம் என்கிறவனன்றே அதிகாரி? இப்படியன்றிக்கே, ஸகலவேதஶாஸ்த்ரங்களாலும் ஸர்வ ப்ரமாணங்களாலும் சொல்லுகிறது என்று ஶப்தத்தாலே அறியவொண்ணாது. அநுபவ ஸித்தமான ஸத்கடாக்ஷத்தாலே தன்னைக் கொடுத்து ரக்ஷிக்கும்போது, இவையித்தனையும் ப்ரமாணம். தர்மநவாய்ச் சொன்னானென்றும், தர்மநகுணங்கள் போருமென்றும் ரூபநாமதேயங்களைக்கண்டு தன் ப்ரேமத்தாலே செய்யுமாகில், அதுவும் அந்யதீர்த்த ப்ரஸாதம் ஆத்ம நாஶம். பெருக்காற்றிலே யிழிவானொருவன் துறைமுக மறியாமல் தானே அக்கரைப்படுகிறேன் என்று இழியுமாகில், தன் கைங்கர்யம் முடியும்; அதிகாரி அதிகாரியோடே யிழியுமாகில் அக்கரைப்படலாவது. அக்கரை யாவது-விரஜைக்கரை. அப்போதன்றே நித்யனாய் நித்யாநுபவம்பண்ணும் நித்யரோடே ஒரு கோவையாய்? இது; சேனைமுதலியார் நம்மாழ்வார்க் கருளிச்செய்த த்வயத்தினுடைய அர்த்தாநுஸந்தாநம்; நம்மாழ்வார் ஸ்ரீமதுரகவியாழ்வார்க் கருளிச்செய்த த்வயத்தினுடைய அர்த்தாநுஸந்தாநம்; ஆளவந்தார் திருக்கோட்டியூர்நம்பி கருளிச்செய்த த்வயத்தினுடைய அர்த்தாநுஸந்தாநம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

திருக்குருகை ரத்நம்—ஸம்பூர்ணம்.

---